# காரைக்கால்
# மஸ்தான் சாஹிப் வரலாறு

கலைமாமணி, தமிழ்மாமணி, சேவா ரத்னா,
தர்காப்புலவர், தாஜுல் கலாம், சாதனைச் செம்மல்
**பேராசிரியர் ஹாஜி மு. சாயபு மரைக்காயர்**
மேனாள் முதுகலைத் தமிழ்த்துறைத் தலைவர்
அறிஞர் அண்ணா அரசு கலைக்கல்லூரி
காரைக்கால்

**வக்ஃபு நிர்வாக சபை**
காரைக்கால்

✤ முதற் பதிப்பு : ஜூன், 1980
✤ இரண்டாம் பதிப்பு : ஜூன், 2015
✤ உரிமை : ஆசிரியருக்கு
✤ பக்கங்கள் : 32

*மஸ்தான் சாஹிப் வலியுல்லாஹ் தர்கா ஷரீப்*

**வக்ஃபு நிர்வாக சபை**

**காரைக்கால்**

*தலைவர்*

**ஹாஜி M.S. முஹம்மது அபூபக்கர் மரைக்காயர், B.A.,**

*துணைத்தலைவர்*

**S.M. முஹம்மது பரீது மரைக்காயர்**

*செயலாளர்*

**M. அப்துல் ரஹ்மான்**

*இணைச் செயலாளர்*

**ஹாஜி M.N. இபுராஹிம் மரைக்காயர், B.Sc.,**

*பொருளாளர்*

**A. செய்யது பாரூக், B.Sc.,**

*நிர்வாக சபை உறுப்பினர்கள்*

**CRC A. ஆரிபு**

**ஹாஜி M. முஹம்மது ஆரிபு**

*இந்நூலை அன்பளிப்பாக வழங்குவோர்*

**S. பஹீமா**

**S. பாலிஹா**

65, நூல்கடை வீதி, காரைக்கால்.

அச்சிட்டோர்
சபாநாயகம் பிரிண்டர்ஸ், 176, கீழ வீதி, சிதம்பரம் - 608 001. ✆ : (04144) 223020, 223040
39, மில்லர்ஸ் ரோடு, கீழ்ப்பாக்கம், சென்னை - 600 010. ✆ : (044) 26401807
3,4,5, காமராஜ் நகர், புத்தகரம், கொளத்தூர் சென்னை - 600 099. ✆ : (044) 65656587
E-mail : sabanayagamprinters@gmail.com

காரைக்கால் மஸ்தான் சாஹிப் வலியுல்லாஹ்
192ஆவது கந்தூரி விழாவையொட்டி
வக்ஃபு நிர்வாக சபை வழங்கும் சிறப்பு நிகழ்ச்சி

# ஆன்மீகப் பெருவிழா

| | | |
|---|---|---|
| நாள் | : | 05.06.2015 ஷஃபான் பிறை 18 **வெள்ளிக்கிழமை** |
| நேரம் | : | **இரவு 9.00 மணி** |
| இடம் | : | மஸ்தான் சாஹிப் வலியுல்லாஹ் தர்கா |
| தலைமை | : | **ஹாஜி M.S. முஹம்மது அபூபக்கர் மரைக்காயர்,** B.A., (வக்ஃபு நிர்வாக சபைத் தலைவர்) |
| நூல் வெளியீடு மற்றும் தொடக்கவுரை | : | **“காரைக்கால் மஸ்தான் சாஹிப் வரலாறு”** கலைமாமணி, தாஜுல் கலாம், சாதனைச் செம்மல் **பேராசிரியர் ஹாஜி மு. சாயபு மரைக்காயர்** (தர்காப் புலவர், மஸ்தான் சாஹிப் வலியுல்லாஹ் தர்கா, பொதுச் செயலாளர், இஸ்லாமியத் தமிழ் இலக்கியக் கழகம்) |
| நூல் பெறுபவர் | : | **திருமிகு ஏ.எம்.எச். நாஜிம்** (புதுவை மாநில ஹஜ் கமிட்டித் தலைவர், காரைக்கால் தெற்கு சட்டமன்ற உறுப்பினர்) |
| சிறப்புரை | : | இலக்கியப் பேரரசி, தமிழ்மாமணி, நஜ்முல் கலாம் **பேராசிரியர் ஹாஜியா சா. நசீமா பானு** (மேனாள் முதுகலைத் தமிழ்த்துறைத் தலைவர் அறிஞர் அண்ணா கலைக்கல்லூரி காரைக்கால்) |
| ஆன்மீகப் பேருரை | : | அதிரை அருட்கவி, தமிழ்மாமணி, கவிதைச் செம்மல் **அல்ஹாஜ் மு. முஹம்மது தாஹா மதனீ,** M.A., B.Ed., (துணைத்தலைவர், இஸ்லாமியத் தமிழ் இலக்கியக் கழகம், காரைக்கால்) |

## அறிவமுதம் பருக அனைவரும் வருக!

## மஸ்தான் சாஹிப் அருள் வேட்டல்

''சீரைக்கால் வாயும் செழித்தோங்கும் காவுகளும்
விரைக்கால் வீசும் வளமிகுந்த - காரைக்கால்
மாபதி யில்வாழும் மஸ்தான் வலியுல்லாக்
கோபதி பாதங் கதி.''

''அஞ்சியுமது தஞ்சம் வேண்டிக் கெஞ்சும் சாஹிபேற்கு
விஞ்சை கள்மிக நெஞ்சில் உறை மஞ்சித வருள்புரிவீர்!
பஞ்சை பலவகை வஞ்சம் வினையின் அஞ்சல் முழுந்திரும்
மஞ்சு சூழ்ந்து கொஞ்சுங் காரை மஸ்தான் ஒலிப்பீரே!''

- ''அமுதகவி'' சாயபு மரைக்காயர்

## வாழி விருத்தம்

''வல்லானும் வாழிவாழி!
வரிசைநபி முகம்மது வாழி!
எல்லாஅஸ் ஹாபும் வாழி!
ஏந்தல்குத்து பொலிகள் வாழி!
நல்லமுஸ் லீம்கள் வாழி!
நாடெல்லாஞ் செழித்து வாழி!
சொல்லுமின் நூலும் வாழி!
ஷாறைலீ மஸ்தான் வாழிவாழி!!''

கலைமாமணி, தமிழ்மாமணி, சேவாரத்னா,
தர்காப்புலவர், தாஜுல் கலாம், சாதனைச் செம்மல்
**பேராசிரியர் மு. சாயபு மரைக்காயர்**
முன்னை முதுகலைத் தமிழ்த்துறைத் தலைவர்
அறிஞர் அண்ணா அரசு கலைக்கல்லூரி
காரைக்கால்

# முன்னுரை

காரைத் திருநகரின் பேரைத் துலங்கச் செய்யும் இறைநேசச் செல்வர் **மஸ்தான் சாஹிப் வலியுல்லாஹ்** அவர்களின் வரலாற்றுச் சுருக்கமே இந்நூல்! துருக்கியில் தோன்றி, இஸ்லாத்தைப் பரப்புவதற்காக இந்தியாவுக்கு வந்து, காரைக்காலில் நல்லடக்கம் கொண்டிருக்கும் இப்பெரியாரின் வரலாறு எளிய உரைநடையில் இல்லையே என்ற குறை நெடுங்காலமாக இருந்து வந்தது.

அந்தக் குறையைப் போக்கும் வகையில் 35 ஆண்டுகளுக்கு முன்னால் 1980-ஆம் ஆண்டில் இச்சிறுநூலை நான் வெளியிட்டேன். அப்போதே பெரும் வரவேற்பைப் பெற்றது இந்நூல்! சிறிய நூலேயாயினும் ஓரளவு இன்றியமையாத வரலாற்று நிகழ்ச்சிகள் எல்லாவற்றையும் உள்ளடக்கியிருப்பது இந்நூலின் தனிச்சிறப்பு! இதன் அருமையை உணர்ந்து அன்றைய முஸ்லிம் பஞ்சாயத்துச் சபையின் செயலாளர் மதிப்புக்குரிய **மு.மு. நத்தர்சாஹிப் மரைக்காயர்** அவர்கள் வலியுல்லாவின் வரலாற்றை மிக விரிவாகவும் விளக்கமாகவும் எழுதுகின்ற பொறுப்பை எங்களிடம் ஒப்படைத்தார்,

1981ஆம் ஆண்டு காரைக்கால் முஸ்லிம் பஞ்சாயத்துச் சபையினரின் முயற்சியால் **“காரைக்கால் மஸ்தான் சாஹிப் வலியுல்லாஹ் வரலாற்றுப் பேழை”** என்னும் பெருநூல் வெளி வந்தது. அப்பொழுதைய புதுவை மாநிலத் துணைநிலை ஆளுநர் **பேராசிரியர் கே.எம். சாண்டி** அவர்கள் அந்நூலை வெளியிட்டுப்

பெருமைப்படுத்தியதோடு, எங்களுக்கும் **"தர்காப் புலவர்"** என்ற விருதை வழங்கிப் சிறப்பித்தார்கள். மேனாள் முதல்வர் **ஹாஜி எம்.ஓ.எச். பாரூக் மரைக்காயர்** உள்துறை அமைச்சர் **டாக்டர் ச. சவரிராசன்,** புதுவை மாநில மேனாள் வக்ஃபு போர்டு தலைவர் **ஹாஜி மு.கா. செய்குதாவூது மரைக்காயர்**, போன்ற பெருமக்கள் எங்களை வாழ்த்திப் பாராட்டினார்கள்.

அந்நூலின் இரண்டாம் பதிப்பு 1992ஆம் ஆண்டிலும், மூன்றாம் பதிப்பு 2007ஆம் ஆண்டிலும் வெளியாகிப் பல்லாயிரக் கணக்கான மக்களின் நல்லாதரவைப் பெற்றன. நான்காம் பதிப்பை மேலும் அழகிய முறையில் விரைவாகக் கொண்டுவரும் முயற்சியில் இன்றைய வக்ஃபு நிர்வாக சபை ஈடுபட்டு வருகின்றது.

இச்சூழலில் வலியுல்லாஹ்வின் வரலாற்றை எல்லாரும் அறியச் செய்ய வேண்டும் என்ற ஆவலில், இந்நூல் வெளியீட்டில் பேரார்வம் காட்டிய வக்ஃபு நிர்வாக சபைத்தலைவர் **ஹாஜி M.S. முஹம்மது அபூபக்கர் மரைக்காயர்,** B.A., மற்றும் நிர்வாக சபையினர் அனைவருக்கும் நன்றி கூறக் கடமைப்பட்டுள்ளேன். காரைக்கால் நூல்கடை வீதியைச் சேர்ந்த சகோதரியர் **S. பஹீமா** மற்றும் **S. பாலிஹா** ஆகிய இருவரும் பொருளுதவி புரிந்து அன்பளிப்பாக இந்நூல் கிடைக்க வகை செய்துள்ளனர். அவர் களுக்கும் என் அகங்கனிந்த நன்றி.

இந்நூலைப் படிக்கும் அனைவருக்கும் மஸ்தான் சாஹிப் வலியுல்லாஹ் அவர்களின் நல்லாசி கிடைக்குமாக.

அன்பில் இன்புறும்

*மு. சாயபு மரைக்காயர்*

8, தம்பி சாயபு மரைக்காயர் வீதி
காரைக்கால்
அலைபேசி : 9842488047

01.06.2015



# காரைக்கால் மஸ்தான் சாஹிப் வரலாறு

அறநெறி பிறழ்ந்து முறை தவறி நடந்த உலக மக்களை உயர் நெறிப்படுத்தி உய்விப்பதற்காக, எல்லாம்வல்ல இறைவன், அகிலத்திற்கோர் அருட்கொடையாய் அண்ணல் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களைப் படைத்தருளினான். உத்தமத் திருநபியும் உலகிற்கோர் அழகிய முன்மாதிரியாய் வாழ்ந்து, கண்மூடிப் பழக்கங்களை மண்மூடச்செய்து, புனித இஸ்லாத்தைப் பூவுலகில் பரப்பினார்கள்.

இறுதி நபியின் மறைவுக்குப் பிறகு இஸ்லாமியக் கொள்கை களை உலகெங்கும் பரப்பவும், நானில மக்களை நன்னெறிப் படுத்தவும் ஆங்காங்குத் தோன்றிய இறைநேசச் செல்வர்களே **"அவுலியாக்கள்"** என அழைக்கப்படுகின்றனர். ஆண்டவனின் பேரருளைப் பெரிதும் பெற்ற அவுலியாக்கள், **"கறாமத்துக்கள்"** எனப்படும் அற்புதங்களை ஆற்றி உலக மக்களின் துயரங்களைப் போக்கியதோடு, திருமறையாம் திருக்குர்ஆனின் கருத்துக்களையும், இஸ்லாத்தின் தத்துவங்களையும் மக்களுக்குத் தெளிவாக உணர்த்தினார்கள்.

அத்தகு இறைநேசச் செல்வர்களுள் ஒருவரே, காரை மாநகரில் நல்லடக்கம் கொண்டிருக்கும் **ஹலரத்து செய்யிதினா ஹாஜி ஷாஹ் அலி இமாம் திவான் மஸ்தான் செய்யிது தாவுது புகாரி வலியுல்லாஹ்** அவர்கள் ஆவார். பதினெட்டாம் நூற்றாண்டின் தொடக்கத்தில்

வாழ்ந்த மஸ்தான் சாஹிப் அவர்களின் வரலாறு, இறை நம்பிக்கை உடையோர்க்கெல்லாம் ஒரு நல்லாறு! சீரும் சிறப்பும்மிக்க அவ்வரலாற்றினை ஈண்டு சுருக்கமாக அறிந்தின்புறு வோமாக!

## திருத்தோற்றம்

துருக்கி நாட்டின் தலைநகரமாகத் துலங்குவது 'புகாரா' என்னும் புனிதப் பட்டணம்! **'கோஹாக்'** மலையருகே **'ஆமு'** என்னும் அழகிய நதியின் கரையில் இத்திருநகரம் அமைந்துள்ளது. இந்நகரில் வணிகப் பெருமகனாக வாழ்ந்த **ஹலரத்து செய்யிது அப்துல்ரவூப்** அவர்களுக்கும், செல்வத்திருமகளாகத் திகழ்ந்த **செய்யிதத்து ருகையா பீவி** அவர்களுக்கும் அருந்தவப் புதல்வராகத் தோன்றியவரே **ஹஜ்ரத் மஸ்தான் சாஹிப் வலியுல்லாஹ்** அவர்கள் ஆவார்.

அரபி இனத்தில், குறைஷி குலத்தில், ஹாஷிம் கிளையில், திருநபியின் மரபில் இருபத்தேழாவது தலைமுறையைச் சார்ந்த வராகத் தோன்றிய மஸ்தான் சாஹிப் அவர்கள், **ஹிஜ்ரி 1124 ஆம் ஆண்டு ஷஃபான் மாதம் 19ஆம் நாள் (கி.பி.1704) செவ்வாய்க்கிழமை** விடியற்காலை சுபுஹு நேரத்தில் இப்புவியில் பிறந்தார்கள்.

பிறந்த குழந்தையின் பேரழகைக் கண்டு பெற்றோரும், உற்றார் உறவினரும் பெருமகிழ்வு கொண்டனர். அழகிய அக் குழந்தைக்குச் **செய்யிது தாவுது** என்ற திருப்பெயர் சூட்டினர். சில ஆண்டுகளுக்குப் பிறகு அப்துல் ரவூப் - ருகையா தம்பதியர்க்கு ஒரு பெண் குழந்தை பிறந்தது. அக்குழந்தைக்குக் **கமூர் பீவி** எனப் பெயரிட்டனர். குழந்தைகள் இருவரையும் தம்மிரு விழிகளாய் மதித்துப் பெற்றோர் பேணி வளர்த்தனர்.

## இளமையும் கல்வியும்

"விளையும் பயிர் முளையிலே தெரியும்" என்னும் பழமொழிக் கேற்ப, இளமையிலேயே செய்யிது தாவுது கல்வியறிவில் சிறந்து விளங்கினார். ஏழு வயது முடிவதற்குள் திருக்குர்ஆன் முழுவதை யும் தெளிவுறக் கற்று மனனம் செய்திருந்தார். தம் மகன் செய்யிது தாவுது மென்மேலும் கல்வியில் மேன்மையுற வேண்டு மென விழைந்த பெற்றோர், புகாராவில் இபுனு சாவியா என்னும் அறிஞர் நடத்திவந்த **'மதுரசே முகம்மதியா"** என்னும் கல்விச் சாலைக்கு அவரை அனுப்பி வைத்தனர்.

அங்கே செய்யிது தாவுது **லுகத்து நகுவு, சருபு** முதலிய அரபு இலக்கிய இலக்கணங்களையும், **பிக்ஹு', அகாயிது, தஸவ்வுபு** என்ற மூவகை அறிவினையும் கற்றுத்தேர்ந்தார். இருபது வயது நிறைவதற்குள் மார்க்கக் கல்வியிலும், உலகியற் கல்வியிலும் பெரும்புலமை பெற்றார். "கற்றவாறு நடப்பவரே கற்றோர்" என்ற நபிமொழிக்கேற்பத் தாம் கற்றவற்றை வாழ்விலும் பின்பற்றினார். சுற்றுப்புறத்தில் வாழ்ந்த கற்றவர்களெல்லாம் செய்யிது தாவுதையே தேடி வந்து, தத்தம் சந்தேகங்களைப் போக்கிக் கொண்டனர்.

கல்வி ஞானத்தில் மட்டுமின்றி, இறைஞானத்திலும் செய்யிது தாவுது இணையற்று விளங்கினார். பகலெல்லாம் நூற்களைக் கற்றவர், இரவெல்லாம் இறைவழிபாட்டில் ஈடுபட்டார். தமது இருபதாவது வயதில் பெற்றோருடன் மக்காவுக்குப் புனிதப் பயணம் சென்று, இஸ்லாத்தின் ஐம்பெருங் கடமைகளுள் ஒன்றாகிய 'ஹஜ்'ஜினை நிறைவேற்றிக்கொண்டு, **'ஹாஜி செய்யிது தாவுதாகத்'** திரும்பினார்.

## முதலமைச்சர் பதவி

இளமையிலேயே இறைநாட்டமும், கல்வித் தேட்டமும் மிக்கவராகத் திகழ்ந்த செய்யிது தாவுதின் புகழ் நாடெங்கும் பரவியது. புகாராவை ஆண்டுவந்த அமீர் **செய்யிது அப்துல் ரஹ்மான்** செவிக்கும் அது எட்டியது. தமது நாட்டின் முதலமைச்சர் பொறுப்பைச் செய்யிது தாவுது ஏற்றால் நாடு நலம் பெறும் என்று அரசர் நம்பினார். அப்துல் ரஹூபையும், ஹாஜி செய்யிது தாவுதையும் வரவழைத்துத் தம் விருப்பத்தை அரசர் வெளியிட்டார்.

இறைநாட்டத்தில் ஈடுபட்டிருந்த செய்யிது தாவுதுக்கு அரசப் பதவியில் சிறிதும் நாட்டமில்லை. ஆயினும் அரசர் போன்றோரின் வற்புறுத்தலால் பொறுப்பை ஏற்க உடன்பட்டார். நல்லதோர் நாளில் பல்லியம் முழங்க முதலமைச்சர் பொறுப்பை ஏற்றார். அப்போது அவருக்கு வயது இருபத்தைந்து. அவர்தம் ஆட்சியில் புகாரா மாட்சியுற்றது.

## முரீது பெறுதல்

செய்குல் இஸ்லாமும் குத்துபுமாகிய ஹலரத்து **செய்யிது அப்துல்லா அலி** அவர்கள், அப்போது புகாராவின் அரசவைக்

குருவாக விளங்கினார்கள். அரசியல் பணிகளில் பகலெல்லாம் உழைத்த அமைச்சர் செய்யிது தாவுது, இரவு நேரங்களில் 'செய்குல் இஸ்லாம்' அவர்களிடம் மெய்ஞ்ஞான விளக்கங்களைக் கேட்டு வந்தார்.

'செய்குல் இஸ்லாமின்' நல்லொழுக்கத்தால் ஈர்க்கப்பட்ட செய்யிது தாவுது, ஒருநாள் அவர்தம் திருக்கரங்களைப் பற்றி, அவருடைய 'முரீது' (அருட்சீடர்) ஆனார். உடனே 'செய்குல் இஸ்லாம்' அவர்களும் செய்யிது தாவுதின் திருவாயைத் திறக்கச் சொல்லி, தம் உமிழ்நீரை அவர் வாயில் உமிழ்ந்தார்கள். பின்னர் தன் சீடரை நோக்கி, "என்னருமை முரீதே! இறைவனின் மிக உயர்ந்த பதவியாகிய ஒலி நிலையை இன்றுமுதல் நீர்பெற்று விட்டீர். ஆனால் அந்நிலை முழுமையுற, மற்றொரு ஞானகுருவை நீர்தேடிக் கொள்ள வேண்டும். என் வாழ்நாள் இன்றோடு முடிந்து விட்டது. என்னை நீர் நல்லடக்கம் செய்வீராக!" என்று கூறி விட்டு, கலிமா ஓதியவர்களாய்த் தம் கண்களை மூடி நல்லுயிர் துறந்தார்கள்.

தமது குரு விரும்பியவாறு அவர்தம் நல்லடக்கத்தைச் செய்யிது தாவுது அவர்கள், தாமே முன்நின்று செய்வித்தார். அதன்பின்னர் ஹாஜி செய்யிது தாவுது வலியுல்லாஹ் அவர்கள், "செய்குல் இஸ்லாம் குறிப்பிட்ட குரு யாராக இருக்கும்!" என்ற சிந்தனையில் ஆழலானார். அதனால் அரசியற் பணிகள் தடைப்பட்டன. ஆயினும் வலியுல்லாஹ் அவர்களின் இறை நாட்டத்திற்கு அரசர் இடையூறாக இருக்காமல், வேண்டிய சலுகைகளை விருப்புடன் வழங்கி ஆதரவளித்து வந்தார்.

## திருமண மறுப்பு

உலகியற் சிந்தனைகள் எதுவுமின்றி வலியுல்லாஹ் அவர்கள் எந்நேரமும் இறைச் சிந்தனையிலேயே ஈடுபட்டிருந்தார். எல்லாச் சிறப்புக்களையும் உடைய வலியுல்லாவுக்கு முப்பத்தைந்து வயதுக்கு மேலாகியும், இன்னும் அவர் மணம் முடிக்கும் எண்ணமின்றி இருக்கிறாரே என்ற கவலை, பெற்றோருக்கு மட்டுமின்றி ஊரில் வாழ்ந்த மற்றையோர்க்கும் ஏற்பட்டது. அரசர் மூலம் அணுகினால் வலியுல்லாஹ் ஒருவேளை திருமணத்திற்கு உடன்படலாம் என்று அவர்கள் நம்பினர். அரசர் அப்துல் ரஹ்மானை அணுகித் தம் மனக்குறையை அவர்கள் முறையிட்டனர். அரசரும் வலியுல்லாவைத் திருமணத்துக்கு இசைய வைக்க எண்ணிய

வராய் அவர்களையும் உடன் அழைத்துக்கொண்டு வலியுல்லாஹ் வாழ்ந்த தனி மாளிகைக்குச் சென்றார்.

தம் இருப்பிடத்துக்கு வந்த அரசர் அப்துல் ரஹ்மான், தந்தை அப்துல் ரவூப் மற்றும் ஊர்ப் பெரியவர்கள் அனைவரையும் வலியுல்லாஹ் உள்ளன்போடு வரவேற்றார். அவர்களது வருகை யின் நோக்கத்தைத் தமது உள்ளுணர்வால் உணர்ந்தார். வந்தவர்கள் தம் கருத்தை வெளியிடுவதற்கு முன்பே வலியுல்லாஹ் அவர்கள் தம் திருவாய் திறந்து' 'நீங்களெல்லாம் இங்கே எழுந்தருளி யிருப்பது எனக்குத் திருமணம் முடிக்க நினைத்து, என் எண்ணத்தையும் அறிந்து கொள்வதற்காகத்தானே?'' என்றார். அரசர் உட்பட அனைவரும் திகைத்துச் சிலையாகி நின்றனர்.

**''இன்றுமுதல் என் வாழ்நாள் முடிய நீங்கள் அனைவரும் அருள் கூர்ந்து என் திருமணச் செய்தியைப் பற்றிப் பேச வேண்டாம். இறை இன்பத்தை மட்டுமே என்மனம் நாடுகின்றது''** என்று வலியுல்லாஹ் அவர்கள் உறுதியாய்ச் சொன்னார்கள். வந்தவர்கள் அனைவரும் மறுத்துப் பேச வழியின்றி, நாடிவந்த எண்ணம் நிறைவேறாததால் வாட்டத்துடன் திரும்பினர்.

## கௌது நாயகத்தைக் கனவில் கண்டது

ஞான குருவைத் தேடிக் கொள்ளும்படித் தமது முதலாசிரியர் ஹலரத்து செய்யிது அப்துல்லாஅலி அவர்கள் கூறியதை வலியுல்லாஹ் அடிக்கடி சிந்தித்தார்கள். ''நமது ஞானாசியர் யார்? அவர் எங்கிருக்கிறார்? அவரை எப்படி அடைவது?'' என்றெல்லாம் தம்முள் புலம்பித்தவித்தார்கள். தம் எண்ணம் ஈடேற இறையருள் கிடைக்காதா என்று ஏங்கினார்கள். ஒருநாள் இரவு 'இஷா' தொழுகையை முடித்துவிட்டு அவர்கள் கண்ணயர்ந்தபோது ஓர் இனிய கனவைக் கண்டார்கள்.

அழகிய ஓர் அரசவை! பச்சைத் தலைப்பாகை அணிந்த ஒரு பெரியார், அந்த அவையின் அரியணையில் அமர்ந்திருக்கிறார். அவரைச் சுற்றிலும் பலர் சூழ்ந்துள்ளனர். அப்போது செய்யிது தாவது வலியுல்லாஹ் அவர்களை அவருடைய ஆசிரியராகிய செய்யிது அப்துல்லா அலி, அரசவைக்கு அழைத்துச் சென்று சபையின் முன்னே நிறுத்துகின்றார். கொலு வீற்றிருந்த பெரியவரிடம் ஏதோ கூறுகின்றார்.

அதைக்கேட்ட பெரியவர் முக மலர்ச்சியோடு வலியுல்லாவை நோக்கி, "செய்யிது தாவுதே! இனி வருந்தற்க! அதோ! அந்த மூலையில் அமர்ந்திருக்கும் **செய்யிது அகமது கல்கல் திவானை** உமது ஞானாசிரியராக ஏற்றுக் கொள்வீராக!" என்று அன்போடு சொன்னார்கள். உவகையுற்ற வலியுல்லா, அப்பெரியவரை நோக்கி, 'நீங்கள் யார்?' என்று வினவ, அவர்கள் 'நான் **அப்துல் காதிர் இபுனு அபுசாலிஹ்**' என விடை பகர்ந்தார்கள். ஞானிகள் நாயகம் கௌது முகையதீன் அப்துல் காதிர் ஜீலானி அவர்களைக் காணும் பேறுபெற்ற செய்யிது தாவுது வலியுல்லா பெருமகிழ்ச்சி அடைந்தார்கள்.

பின்னர் கௌது நாயகம் சுட்டிக் காட்டிய கல்கல் திவானைக் கண்டு "சலாம்" சொன்னார்கள். அகம் மகிழ்ந்த கல்கல் திவான் வலியுல்லாவை நோக்கி, **"செய்யிது தாவுதே! ஷா இமாம் திவானே!"** அஞ்சற்க! நான் வாழும் திருச்சிராப்பள்ளிக்குப் புறப்பட்டு வருக!" என்று திருவாய் மலர்ந்தார்கள் அளவற்ற மகிழ்ச்சியுற்ற வலியுல்லா திடுக்கிட்டு விழித்தார்கள். அப்போதுதான் இதுவரை தாம் கண்டது அனைத்தும் கனவென்று உணர்ந்தார்கள்; கவலை கொண்டார்கள்.

## புகாராவை விட்டுப் புறப்படுதல்

மறுநாள் பொழுது புலர்ந்ததும் தாம் கண்ட கனவைப் பெற்றோர்க்கும் அரசர்க்கும் வலியுல்லா விரிவாக எடுத்துச் சொன்னார்கள். 15 ஆண்டுகளாகப் பணியாற்றி வந்த அமைச்சர் பொறுப்பிலிருந்து விலகி, தமது ஞான குருவைக் காணத் திருச்சிக்குப் புறப்படவிருப்பதாகக் குறிப்பிட்டார்கள்; இறுதிக்காலம் வரை அருந்தவப் புதல்வர், தம்மோடு இருப்பார் என்று எண்ணி யிருந்த அப்துல் ரவூபும், ருகையாவும் கண்ணீரும் கம்பலையு மாய்ப் பெருந்துயருக்கு ஆளாயினர். மன்னர் அப்துல் ரஹ்மானோ நல்லமைச்சரை இழக்க விரும்பாமல் மனம் வருந்தினார்.

மன உறுதியோடு அவர்களை வலியுல்லாஹ் நோக்கி, "கௌதுல் அஃலமே கனவில் தோன்றி' எனது ஞான குருவைச் சுட்டிச் சொல்லிவிட்ட பிறகு, இனியும் நான் இங்கிருப்பது முறை யாகாது. இறைவழியில் புறப்பட்டிருக்கும் எனது பயணத்தை அருள்கூர்ந்து யாரும் தடுக்காதீர்கள்!" என்று அன்போடு வேண்டி னார்கள். மறுக்கும் வழியற்ற பெற்றோர் தம் மனத்துயரை வெளிக்

காட்டாமல், மகனை உச்சிமோந்து ஆரத்தழுவி ஆசி கூறி' அனுப்பிவைத்தார்கள். ஆறாத் துயரோடு அரசரும் விடை கொடுத்தார். இறைவழியில் வலியுல்லா அவர்கள் ஞானப்பயணம் புறப்பட்ட போது, அவர்களுக்கு வயது நாற்பது.

## மெருவுப் பட்டணத்தில் தங்கையைக் கண்டது

அல்லாஹ்வின் பாதையில் தனியராய் அருட்பயணம் புறப்பட்ட வலியுல்லா அவர்கள், காடு மலைகளையும் மேடு பள்ளங்களையும், நாடு நகரங்களையும் கடந்து மெருவுப் பட்டணம் வந்து சேர்ந்தார்கள். அங்கே தங்கை கபூர் பீவியின் இல்லத்துக்கு அவரிடம் சொல்லிச் செல்வதற்காகச் சென்றார்கள். கபூர் பீவியும், அவரது கணவராகிய, செய்யிது அப்துல்லா சாலீமும் வலியுல்லாவை இன்முகத்தோடு வரவேற்று விருந்தோம்பினார்கள்.

தமையனாரின் தனிவழிப் பயணத்தின் நோக்கத்தை அறிந்த கபூர்பீவி தடைகள் பல கூறி வலியுல்லாவின் பயணத்தைத் தடுத்து நிறுத்த முயன்றார். தம் எண்ணத்தில் திண்ணமாயிருந்த வலியுல்லா, தங்கைக்குத் தக்க அறிவுரைகளைக் கூறித் தம் பயணத்தைத் தொடர்ந்தார். கண்ணீர் மழை சொரிய அன்புத் தங்கையும் வலியுல்லாவை வழியனுப்பி வைத்தார்.

## தஸ்பீஹ் மணி மாயமாய் மறைந்தது

மெருவுப் பட்டணத்திலிருந்து புறப்பட்ட செய்யிது தாவுது புகாரி வலியுல்லா சுவாது என்னும் பட்டணத்தை அடைந்து அங்குள்ள ஒரு பள்ளிவாசலில் தங்கியிருந்தார்கள். திருக்குர்ஆன் தெளிவுரைகளையும், திருநபி பொன்மொழிகளையும் அங்குக் கூடும் மக்களுக்கு விரிவாக விளக்கி வந்தார்கள். வலியுல்லாவின் சொற்பொழிவுகளைக் கேட்பதற்காக அவ்வூர்ப் பள்ளிவாசலில் கூட்டம் பெருகியது.

இஃது இவ்வாறிருக்க, சுவாது என்னும் அவ்வூரில் **செய்யிது இபுராஹீம் ஆரிபு** என்னும் ஓர் அறிஞர் வாழ்ந்து வந்தார். தமக்குத் தக்கதோர் ஞானகுருவை அவரும் தேடிக் கொண்டிருந்தார். அதை உணர்ந்திருந்த ஊர்மக்கள் அவரை அணுகி, செய்யிது தாவுது புகாரி வலியுல்லாவின் பெருமையை எடுத்துக் கூறினர். செய்யிது இபுராகிமோ ஊராரின் கூற்றுகளைச் சற்றும் பொருட் படுத்தாமல் தஸ்பீஹ் வைத்து ஓதிக் கொண்டிருந்தார்.

அப்போது அவர் கையிலிருந்த தஸ்பீஹ் மணி திடுமென்று மாயமாய் மறைந்தது. ஊரார் அவ்விந்தையைக் கண்டு திகைத்து நின்றனர்.

வலியுல்லாவின் பெருமையை மதிக்காமல் இருந்ததே, தஸ்பீஹ் மணி மாயமாய் மறைந்ததற்கான காரணம் என்பதைச் செய்யிது இபுராகீம் நன்கு உணர்ந்தார். நடுக்கத்தோடு வலியுல்லாவை நாடி வந்தார். அங்கே தியானத்தில் இருந்த வலியுல்லாவின் முன்னர், தமது தஸ்பீஹ் கிடப்பதைக் கண்டு மலைத்து நின்றார். செய்யிது தாவுது புகாரி வலியுல்லா அவர்கள் அவரை நோக்கி, "செய்யிது இபுராகீமே நீர் ஒரு ஞான குருவைத் தேடிக் கொண்டிருக்கிறீர் அல்லவா? என்னோடு வந்தால் உமது எண்ணம் நிறைவேறும். தளர்ச்சி அடையற்க! உம் உள்ளத்தைச் சோதித்துப் பார்த்தேன். இதோ! உம் தஸ்பீஹ் பெற்றுக் கொள்க!" என்று கூறித் தஸ்பீஹ் மணியைக் கொடுத்தாரக்ள்.

வலியுல்லாவின் அற்புத ஆற்றலை உணர்ந்த செய்யிது இபுராகீம், "என்னை மன்னியுங்கள் வலியுல்லாவே! நீங்களே எனக்கு வழிகாட்ட வேண்டும். தாங்கள் சொன்னவாறு நான் உங்களுடன் வருகிறேன்" என்று பணிவோடு சொன்னார். அவரது வேண்டுகோளை ஏற்று, செய்யிது இபுராகீம் ஆரிபையும் தம்முடன் அழைத்துக் கொண்டு வலியுல்லா சுவாது நகரைவிட்டுப் புறப்பட்டார்கள்.

## கள்ளர்க்குக் கண்ணொளி தந்தது

பின்னர் காந்தகார் என்னும் பட்டணத்தை அடைந்து, அங்கே ஓரிடத்தில் வலியுல்லாஹ் செய்யிது இபுராகீம் ஆரிபுடன் தங்கியிருந்தார்கள். அப்போது அங்கே வாழ்ந்த கள்ளர்கள் சிலர் அவர்கள் இருவரையும் வணிகர்களென நினைத்து அவர்களிட மிருந்து பொருளைத் திருடுவதற்காகத் தக்க நேரம் பார்த்திருந்தனர்.

வழிநடைக் களைப்பால் செய்யிது இபுராகீம் கண்ணயர்ந்தார். வலியுல்லா மட்டும் உறங்காது இறைவனை எண்ணி 'திக்று' செய்து கொண்டிருந்தார்கள். அவர்களும் உறங்கட்டும் என்று கள்ளர்கள் காலம் கருகியிருந்தனர். நள்ளிரவுக்கு மேலாகியும் வலியுல்லாஹ் உறங்கவில்லை. மறைந்திருந்த கள்ளர்கள் சற்று நேரம் கழித்து வலியுல்லா உறங்கி விட்டாரா என்று உற்று நோக்கினர். திருடர்களின் மனக்குறிப்பை உணர்ந்த வலியுல்லா,

தம் திருவிழிகளைத் தடவினார்கள். மறுகணம் கள்ளர்களின் கண்கள் குருடாயின.

கண்ணொளி இழந்த கள்ளர்கள் கதறித் துடித்தனர். அவர்களது அலறல் கேட்டு ஊர் மக்கள் அங்கே ஒன்று கூடினர். பொழுதும் புலர்ந்தது. கள்ளர்கள் நடந்ததைக் கூற, ஊர் மக்கள் வலியுல்லாவிடம் மன்னிப்பு கேட்குமாறு அவர்களுக்கு அறிவுரை புகன்றனர். உடனே கள்ளர்கள் வலியுல்லாவை அணுகி, அவர்களது திருவடிகளில் வீழ்ந்து, "உங்கள் பெருமை உணராமல் நடந்து கொண்டோம். இனி நாங்கள் களவு புரிய மாட்டோம். எங்களை மன்னித்துக் கண்ணொளி தந்து நல்வழி காட்டுங்கள்!" என்று கதறியழுதனர்.

இரக்கச் சிந்தை மிக்க வலியுல்லாஹ் தங்கள் உமிழ்நீரைத் தொட்டுக் கள்ளர்களின் குருட்டுக் கண்களின்மேல் தடவினார்கள். அடுத்தகணமே கள்ளர்கள் முன்னினும் பொலிவான கண்ணொளி பெற்றார்கள். மனம் திருந்திய அவர்கள், வலியுல்லாவின் திருக்கரங்களைப் பற்றிக் 'கலிமா, கூறி இஸ்லாத்தைத் தழுவினார்கள். கள்ளர்களுக்குக் கண்ணொளி வழங்கிய வலியுல்லாஹ் இஸ்லாமியக் கொள்கைகளை அவர்களுக்கு எடுத்துரைத்துக் கருத்தொளியும் நல்கினார்கள்.

## இந்தியாவுக்கு வருகை

துருக்கியிலிருந்து ஞான குருவைத் தேடித் திருச்சிக்குப் புறப்பட்ட செய்யிது தாவுது வலியுல்லா அவர்கள், தாம் வரும் வழிகளிலெல்லாம் பல அற்புதச் செயல்களை ஆற்றியவர்களாய் இந்திய எல்லைக்குள் நுழைந்தார்கள். **முல்தான் நகரில்** நவாபின் பூங்காவில் பட்ட மரங்களையெல்லாம் பசுமையாக்கியும், **சிந்து ஹைதராபாத்தில்** அவ்வூர் அரசர் முகம்மது அப்துல்லாவின் மகனது பெருநோய் போக்கியும், **நாசிக்** நகரில் மீனவர்களது வருவாயைப் பெருக்கி இஸ்லாத்தில் சேர்த்தும், **பைகன்பள்ளியில்** கோயில் பூசாரியின் தொழுநோய் தீர்த்தும் பற்பல அற்புதங்களைப் புரிந்தவர்களாய்க் கோதாவரி நதிக்கரையிலுள்ள **நாந்தேர்** வந்து சேர்ந்தார்கள்.

## மக்கட் பிணி தீர்த்த அதிசய ரொட்டி

வலியுல்லாஹ் நாந்தேரில் ஒருவீதியின் வழியே செல்லுங்கால், அங்குள்ள ஓர் ஹக்கீம் (மருத்துவர்) வீட்டில் நோயாளிகள் குழுமி

யிருக்கக் கண்டார்கள். அந்த ஹக்கீமை அழைத்து “பீர் அகமது அலி ஹக்கீமே! ரொட்டி சுட்டு வைக்கும்படி நீர் உம் மனைவியிடம் கட்டளையிட்டு வந்தீர் அல்லவா! அவை தயாராக இருக்கின்றன. நீர் போய் எடுத்து வாரும்!” என்று சொன்னார்கள். தமது பெயரையும், தம் மனைவியிடம் ரொட்டி சுடச்சொன்னதையும் வலியுல்லாஹ் எப்படி உணர்ந்து சொன்னார் என்று எண்ணி வியந்த பீர் அகமது திகைத்து நின்றார்.

பின்னர் தம் இல்லம் சென்று மனைவியிடம் ‘ரொட்டி சுட்டாயிற்றா?’ என்று வினவினார், அதற்கு அவர் தாம் ரொட்டி சுடுவதற்கு முன்னரே, சமையலறையில் மூன்று பீங்கான் தட்டுகளில் ரொட்டி சுடப்பட்டு அடுக்கப்பட்டிருக்கும் அதிசயத்தைக் காட்டினார். வியப்புற்ற ஹக்கீம் அந்த அதிசய ரொட்டிகளை எடுத்துக்கொண்டு வலியுல்லாவிடம் வந்தார்.

அவற்றுள் ஒரு தட்டினை ஹக்கீமுக்கும், மற்றொரு தட்டினைத் தன்னொடு வந்து செய்யிது இபுராகீம் ஆரிபுக்கும் கொடுத்த வலியுல்லா, மூன்றாவது தட்டிலிருந்த ரொட்டியைத் தாம் உண்டார். உண்டது போக எஞ்சிய ரொட்டியை வீட்டு வாசலில் குழுமியிருநத நோயாளிகளுக்குக் கொடுக்கும்படிச் செய்தார். அள்ள அள்ளக் குறையாத அமுதசுரபியைப் போன்ற நோயாளிகளுக்குக் கொடுக்கக் கொடுக்க அந்தத் தட்டில் ரொட்டி பெருகிக் கொண்டே இருந்தது.

தம் வயிறார உண்ட அந்நோயாளிகள் ஹக்கீமிடம் மருந்துகள் எதுவும் பெறாமல் வீடு திரும்பலாயினர். ஹக்கீம் அவர்களைத் தடுத்து, “மருந்து வாங்க மறந்து விட்டீர்களா?” என்று வினவினார். அதற்கு அவர்கள் “நீங்கள் கொடுத்த ரொட்டியை உண்டதுமே, எங்கள் பிணி மறைந்துவிட்டது. உள்ளத்தில் உற்சாகம் பிறந்து விட்டது. எனவே, மருந்து எங்களுக்குத் தேவையில்லை” என்று கூறிவிட்டுத் தத்தம் வீட்டுக்குச் சென்றனர். மக்கட்பிணி தீர்த்த மகானின் புகழ் அக்கம் பக்கமெங்கும் பரவலாயிற்று.

## பெற்றோரின் மறைவு

ஆங்காங்கே பல அற்புதங்களை நிகழ்த்தி வந்த ஹாஜி செய்யிது தாவுது வலியுல்லா அவர்கள் தமிழ்நாட்டை அடைந்து, வேலூரில் துணி வணிகம் புரிந்துவந்த அமீனுல்லா சாயபு என்பவரின் இல்லத்தில் சிறிது தங்கியிருந்தார்கள். அப்போது

வலியுல்லாவின் முகம் திடுமெனக் கவலையில் ஆழ்ந்தது. உடலெல்லாம் நடுங்கியது; கருணை விழிகள் கண்ணீரைச் சொரிந்தன. அதைக்கண்டு அதிர்ச்சியுற்ற அமீனுல்லா சாயபும், செய்யிது இபுராகீம் ஆரிபும் வலியுல்லாவை நோக்கி "உங்களுக்கு என்ன நேர்ந்தது?" என்று வினவினர்.

அதற்கு அவர்கள், "என் தாய்நாடாகிய புகாராவில் தற்போது என் தாயாரும், தந்தையாரும் ஒருவருக்குப்பின் ஒருவராய் இறந்து விட்டார்கள். நீங்கள் பேசிக்கொண்டிருங்கள்! நான் இதோ வருகிறேன்" என்று கூறிவிட்டு, வீதியில் இறங்கி நடந்து மாயமாய் மறைந்தார்கள். மற்ற இருவரும் துயரக் கடலில் ஆழ்ந்தனர். காலையில் சென்ற வலியுல்லா மாலையில்தான் திரும்பிவந்தார்கள். "இவ்வளவு நேரம் எங்கே போயிருந்தீர்கள்?" என்று இருவரும் வினவ, வலியுல்லாஹ் அவர்களை நோக்கி, "நான் புகாரா சென்று என் பெற்றோரின் இறுதிச் சடங்குகளை முடித்துவிட்டு, அங்குள்ளோர்க் கெல்லாம் 'சலாம்' சொல்லிவிட்டு, நீங்கள் காத்திருப்பீர்களே என விரைந்து வந்தேன்' என்று பதில் சொன்னார்கள், அதைக்கேட்ட இருவரும் சிறுபொழுதில் நெடுந்தொலைவு சென்று திரும்பிய வலியுல்லாவின் வலித்தன ஆற்றலை உணர்ந்து போற்றிப் புகழ்ந்தார்கள்.

## காணாமற் போன பெண்ணைக் கண்டு பிடித்தது

வேலூரில் அமீனுல்லா சாயபுவின் நண்பர் மகள் திருமணத் திற்கு வலியுல்லாஹ் சென்றிருந்தார்கள். திருமண நேரத்தில் மணப்பெண் மாயமாய் மறைந்துபோனாள். மணமகளின் தந்தை வலியுல்லாவிடம் முறையிட்டழுதார். தமது வலித்தன ஆற்றலால் மணப்பெண்ணைத் தருவித்து, கடத்திச் சென்ற கள்ள ஜின்னை எரிக்குள்ளாக்கி, கல்யாணப் பெண்ணை மணமனையில் சேர்த்துத் திருமணத்தை வலியுல்லாஹ் நடத்தி வைத்தார்கள்.

## திருச்சியில் ஞானகுருவைச் சந்தித்தது

தமது ஞானப்பயணத்தின் நோக்கத்தை நிறைவேற்றும் பொருட்டு, இறுதியாக வலியுல்லா அவர்கள் வேலூரிலிருந்து வாணியம்பாடி, சேலம் வழியே திருச்சி வந்தடைந்தார்கள். அவர் களது வருகையைத் தமது ஞானநோக்கால் உணர்ந்த செய்யிது அகமது கல்கல் திவான், தமது மாணவர்களுடன் சென்று வலியுல்லாவை எதிர்கொண்டு வரவேற்றார்கள்.

கனவில் கண்ட கல்கல் திவானை நேரிற்காணும் பேறு பெற்ற செய்யிது தாவுது வலியுல்லா, தமது ஞானகுருவின் திருவடி களில் வீழ்ந்தார். அன்போடு அவரைத் தூக்கி ஆரத்தழுவிக் கொண்டார் கல்கல் திவான். பின்னர் சில ஆண்டுகள் செய்யிது தாவுது வலியுல்லாவும், செய்யிது இபுராகிமும் கல்கல் திவான் அவர்களிடம் ஞானக் கல்வி பெற்றனர். எல்லா உபதேசங்களையும் எடுத்துரைத்த கல்கல் திவான். ஒருநாள் வலியுல்லாவுக்குப் 'பியாலா' என்னும்ஞான அமுதத்தைப் புகட்டி அவர்களை 'முரீது' (அருட்சீடர்) ஆக்கினார்கள். பின்னர் நாற்பது நாட்கள் வலியுல்லாவைக் 'கல்வத்' (தனிமைத் தியானம்) இருக்க வைத்தார் கல்கல் திவான்.

இறுதியில் ஒருநாள் ஞானகுரு, வலியுல்லாவை நோக்கி, "என்னருமை முரீதீனே! நீர் எண்ணி வந்த நோக்கம் நிறை வேறியது. உம்மையும், உம் வணக்கத்தையும் இறைவன் ஏற்றுக் கொண்டான்" என்று நன்மொழி நவின்றார்கள். அவ்வாறே செய்யிது இப்ராகீம் ஆரிபுக்கும் செய்தார்கள். ஞானநிலையில் முழுநிறைவு பெற்ற செய்யிது தாவுது வலியுல்லா அவர்கள், அன்று முதல் "மஸ்தான் சாஹிப்" ஆனார்கள்.

## மழை பொழிவித்தது

திருச்சியில் மஸ்தான் சாஹிப் வலியுல்லா அவர்கள் தங்கி யிருந்தபோது, அவ்வூரில் மழை பொழியாமல் பஞ்சம் நிலவியிருந்தது. வலியுல்லாவின் அற்புத ஆற்றலை அறிந்திருந்த அவ்வூர் இந்துக்கள் மஸ்தான் சாஹிப் அவர்களைத் தஞ்சமடைந்து, மழை பெய்ய இறைவனிடம் இறைஞ்சுமாறு கெஞ்சினர்.

அதற்கு வலியுல்லா அவர்கள், "உங்கள் விருப்பப்படி இறை யருளால் மழை பொழியச் செய்கிறேன். ஆனால் நீங்கள் எனது ஞானகுருவுக்கும், அவரது வழித்தோன்றல்களுக்கும் உங்கள் இல்லங்களில் நடைபெறும் திருமணம் ஒவ்வொன்றுக்கும் 10 ரூபாயும், மரணம் ஒவ்வொன்றுக்கும் 5 ரூபாயும் குறைவின்றிக் கொடுத்து வருவீர்களா?" என்று வினவினார். இந்துக்கள் எல்லாரும் ஒருமித்த குரலில் அதற்கு உடன்பட்டனர்.

பின்னல் வலியுல்லா அவர்கள் இருகரமேந்தி இறைவனிடம் 'துஆ' கேட்டனர். மறுகணமே மழை பொழிய, மஸ்தான் சாஹிபின் அற்புதம் அறிந்து மக்கள் எல்லாரும் வியந்தனர்.

வலியுல்லாவுக்கு வாக்களித்தவாறு ஞானகுருவின் வழித்தோன்றல் களுக்கு இந்துக்கள் பணம்கொடுக்கும் வழக்கம், இன்றளவும் நடைபெற்று வருவதாகக் கூறுகின்றனர்.

## ஞானகுருவின் மறைவும் ஆரிபின் பிரிவும்

ஏறத்தாழ 12 ஆண்டுகள் மஸ்தான் சாஹிப் வலியுல்லா, திருச்சியில் தமது ஞானகுருவிடம் ஞானப்பயிற்சி பெற்றார்கள். அப்போது இறைவன் நாட்டப்படி ஹிஜ்ரி 1221 ஆம் ஆண்டு முஹர்ரம் 11 ஆம் நாள் அன்று, வலியுல்லாவின் ஞானகுருவாகிய கல்கல் திவான் இறையடி சேர்ந்தார்கள். மஸ்தான் சாஹிப் அவர் களே முன் நின்று தமது ஞானகுருவின் இறுதிச் சடங்குகளைச் செய்து நல்லடக்கம் புரிந்தார்கள். திருச்சி பாலக்கரையிலுள்ள ஷாம் தாரி திவான் பள்ளிவாசல் என்னும் தைக்காவில், கல்கல் திவானின் அடக்கவிடம் அமைந்துள்ளதை இன்றும் காணலாம்.

பிறகு இதுகாறும் தமக்கு வழித்துணையாக அமைந்த செய்யிது இபுராகிமை நோக்கி, "உங்கள் நோக்கம் நிறைவேறி விட்டதால் இனி தங்கள் விருப்பப்படி எங்கும் செல்லலாம்" என்று வலியுல்லாஹ் உரைத்தார்கள், அவரும் மஸ்தான் சாஹிப் அவர்களிடமிருந்து பிரியா விடைபெற்றுச் சென்றார்கள். தற்போது செய்யிது இபுராகீம் அவர்களின் அடக்கவிடம் மதுரை மாவட்டத் திலுள்ள கணவாய் மலையடிவாரத்தில் உள்ளது.

## நாகூரில் மஸ்தான் சாஹிப்

அதன் பின்னர் திருச்சியிலிருந்து தனியராய்ப் புறப்பட்ட மஸ்தான் சாஹிப் வலியுல்லா புதுக்கோட்டைக்குச் சென்று, அங்கே அரசாண்ட தொண்டைமான் என்னும் மன்னனின் தீராத கும்பநோயைத் தீர்த்து வைத்தார்கள். வல்லத்தில் பாம்பு தீண்டப் பெற்று மூர்ச்சையுற்றுக் கிடந்த சிறுவனை உயிர்ப்பித்தார்கள். அங்கிருந்து தஞ்சாவூர், திருவாரூர் வழியாக நாகூர் வந்த குத்புல் அக்தாபு ஷாஹுல் ஹமீத் ஆண்டகையின் தர்காவில் 40 நாட்கள் கல்வத்து இருந்தனர்.

## காரைக்கால் மஸ்தான் சாஹிப்

அங்கிருந்து புறப்பட்டு காரைச் செடிகள் அடர்ந்தும், உப்பளங்கள் நிறைந்தும் விளங்கிய 'காரைக் காயல்' என்னும் பிரெஞ்சு ஆட்சிக்குட்பட்டிருந்த திருநகருக்கு மஸ்தான்சாஹிப்

எழுந்தருளினார்கள். 'காயல்' என்னும் சொல் உப்பளத்தைக் குறிப்பதாகும் **'காரைக் காயல்'** என்பதே காலப்போக்கில் மருவிக் **'காரைக்கால்'** என்று வழங்கப்படலாயிற்று.

காரைக்காலில் காரைச் செடிகள் அடர்ந்த ஓர் காட்டில், மஸ்தான் சாஹிப் அவர்கள் தனித்திருந்து தவம் புரிந்தார்கள். அவ்வழிச்சென்ற மீனவர்கள் வலியுல்லாவைக் கண்ணுற்று, அவர்கள் ஒரு முஸ்லிம் பெரியார் என்று உணர்ந்து, நகருக்குள் வந்து முஸ்லிம் பெருமக்களிடம் வலியுல்லாவைப் பற்றி உரைத்தார்கள்.

அப்போது காரைக்கால் முஸ்லிம் நாட்டாண்மைக்காரராக விளங்கிய சின்ன லெவ்வை மரைக்காயரும் மற்ற முஸ்லிம் பெருமக்களும் காரைக்காட்டிற்குள் சென்று மஸ்தான் சாஹிப் வலியுல்லாவைக் கண்டார்கள். அவர்களது திருமுகத்தில் ஞானப் பேரொளி சுடர்விடுவதைப் பார்த்துப் பெருமகிழ்ச்சி கொண்டார்கள். ஊருக்குள் வரும்படி வலியுல்லாவிடம் மன்றாடிக் கேட்டார்கள். அவர்களும் இசையவே மஸ்தான் சாஹிப் வலியுல்லாவுக்குத் தக்க மரியாதை செய்து காரைக்காலுக்குள் அழைத்துவந்து, சின்னலெவ்வை மரைக்காயரின் இல்லத்தில் தங்கியிருக்கச் செய்தார்கள்.

## கீழக்கரை தைக்கா சாயபு சோதிக்க வந்தது

மஸ்தான் சாஹிப் வலியுல்லாஹ் காரைக்காலில் தங்கியிருந்த போது பற்பல அற்புதங்களை ஆற்றிவந்தார்கள். அவர்களது பெருமையும், புகழும் நாடெங்கும் பரவலாயிற்று. அப்போது கீழக்கரையில் வாழ்ந்த 'தைக்கா சாயபு' என்று அழைக்கப்பட்ட **செய்கு அப்துல் காதிர் ஆலிம் சாயபும்** வலியுல்லாவின் பெருமை களைக் கேள்வியுற்றார். அவர் குணங்குடி மஸ்தானின் ஆசிரியர் ஆவார். காரை மஸ்தான் சாஹிப் உண்மையிலேயே வலிதானா என்று அவர் கண்டறிய விரும்பினார். மஸ்தான்சாஹிப் வலியுல்லாவைச் சோதித்துப் பார்க்கும் நோக்கத்தோடு தைக்கா சாயபு கீழக்கரை யிலிருந்து புறப்பட்டுக் காரைக்கால் வந்தடைந்தார்.

"இக வாழ்க்கை, பர வாழ்க்கை, இறை தரிசனம் ஆகிய மூன்றும் ஒரே காலத்தில் கைகூடுமா?" என்ற கேள்விக்கு மஸ்தான் சாஹிப் தகுந்த விடையளித்துவிட்டால், அவரை ஓர் வலியுல்லாவாக ஏற்றுக்கொள்ளலாம் என்று தைக்கா சாயபு தம்முள் முடிவு செய்திருந்தார். தம்மைச் சந்திக்க வந்த தைக்கா சாயபுவைப்

பேரன்போடு வரவேற்ற மஸ்தான் சாஹிப் வலியுல்லா, அவர்களுக்கு விருந்து படைத்தார். அவ்விருந்தின் முடிவில் தாம்பூலம் சாப்பிட, மஸ்தான் சாஹிப் ஒரு கொட்டைப்பாக்கை எடுத்து வெட்ட, அது மூன்று துண்டுகளாயின.

அம்மூன்று துண்டுகளையும் வலியுல்லா தைக்கா சாயபுவிடம் கொடுத்து 'இவற்றை ஒன்றுபடுத்துங்கள்' என்று கூறினார்கள். தைக்கா சாயபு எவ்வளவோ முயன்றும் அத்துண்டுகளை ஒன்று படுத்த இயலவில்லை. தம் இயலாமையைத் தைக்கா சாயபு வெளிப்படுத்த மஸ்தான்சாஹிப் வலியுல்லாஹ் அவரை நோக்கி "தாங்கள் நாடிவந்த எண்ணமும் ஒன்றுபடாததே" என்று உரைத்தார்கள். அதைக்கேட்ட தைக்கா சாயபு பெருவியப்படைந்தார். தம் உள்ளத்துள் கருதியிருந்த எண்ணத்தை உணர்ந்து அதற்குத் தக்க விடையளித்த மஸ்தான் சாஹிப் உண்மையிலேயே வலியுல்லாதான்' என்று உறுதிகொண்டு அவர்களைப் போற்றிப் புகழ்ந்தார்.

## ஊமைப்பிள்ளையைப் பேச வைத்தது

இதற்கிடையே நாட்டாண்மைக்கார சின்னலெவ்வை மரைக்காயர் இறந்துபோகவே, மஸ்தான் சாஹிப் அவர்கள் வணிகப் பெருமகனாராகிய சுல்தான் என்பவரது இல்லத்தில் வாழ்ந்துவந்தார்கள். அப்போது கீழக்கரையில் பிரபுவாய் விளங்கிய **ஹபீபு முகம்மது மரைக்காயர்** என்பவர் மஸ்தான் சாஹிப் வலியுல்லாவை நாடி வந்தார் ஏழுவயதாகியும் இன்னும் பேசாத ஊமையாய் இருக்கும் தமது மகனை அழைத்துவந்து, அச் சிறுவனுக்குப் பேசும் ஆற்றலைப் பெற்றுத் தருமாறு உளமுருக வேண்டினார்.

அன்பர்களின் குறைதீர்க்கும் ஒலியுல்லா அவருக்கு ஆறுதல் கூறி, அந்தச் சிறுவனைத் தம்மோடு தங்கவைத்துக் கொண்டார்கள். ஒவ்வொரு நாளும் சுபுஹு நேரத்தில அந்தச் சிறுவனின் வாயில் ஒலியுல்லா உமிழ்ந்து வந்தார்கள். மூன்று நாட்களுக்குப் பின்னர் அந்தச் சிறுவன் மூங்கை நிலைநீங்கிப் பேசலானான். ஊமைப் பிள்ளையைப் பேசவைத்த வலியுல்லாவுக்காக உள் மகிழ்வோடு ஹபீப் முகம்மது கீழத்தெருவில் ஒரு மனை வாங்கினார். அங்கே வலியுல்லா அடங்கவேண்டுமெனத் தம் விருப்பம் தெரிவித்துக் கொடுத்துச் சென்றார். ஆனால் கவனிப்பாரின்மையால் அந்த மனை காலப்போக்கில் பாழ்பட்டு, கடைசியில் வேறு சிலருக்கு உடைமையாயிற்று.

## இளவரசியை இஸ்லாத்தில் சேர்த்தது

கேரளத்தின் ஒரு பகுதியை **இராஜதுரந்தரன்** என்ற அரசன் அப்போது ஆண்டு வந்தான். அவனது புதல்வியாகிய இளவரசி ஒருநாள் இரவில் ஓர் இனிய கனவைக் கண்டாள். அந்தக் கனவில் மஸ்தான் சாஹிப் வலியுல்லா அவர்கள் தோன்றி, ''இளவரசியே! நீர் இஸ்லாத்தில் சேர்ந்து, உம் பெயரைப் **படேசா பீவி** என்று மாற்றிக் கொள்வீராக!'' என்றார்கள். உடனே இளவரசி ''தாங்கள் யார்'' என்று வினவ, ''நான் காரைக்காலில் வாழும் மஸ்தான்! நீர் அங்கே வந்து என்னைக் காண்பீராக!'' எனக்கூறி மறைந்தார்கள்.

திடுக்கிட்டு விழித்த இளவரசி, இதுவரை தாம் கண்டது அனைத்தும் கனவென அறிந்து கண் கலங்கினாள். அரண்மனை வாழ்வை வெறுத்து வலியுல்லாவைக் காணவேண்டுமென்ற ஆர்வத்தோடு, யாருக்கும் தெரியாமல் அரண்மனையை விட்டுப் புறப்பட்டுத் திருநெல்வேலியை அடைந்தாள். அங்கே காதிர்பீவி அம்மாள் என்ற பெண்மணியிடம் இஸ்லாத்தைப் பற்றிக் கேட்டறிந்து, வலியுல்லா சொன்னதுபோல் தம் பெயரைப் 'படேசா பீவி' என மாற்றிக் கொண்டாள்.

படேசா பீவியின் மன உறுதியைக் கண்டு வியந்த காதிர்பீவி அம்மாள், வலியுல்லாவைக் காண்பதற்குத் தாமும் காரைக்காலுக்கு உடன்வருவதாகக் கூறினார். அவ்வூரில் தமக்கிருந்த பொறுப்புக் களை முடித்துக்கொண்டு, தமது மூன்று பிள்ளைகளோடு படேசா பீவியுடன் காரைக்காலுக்குப் புறப்பட்டார், காரைக்கால் வந்தடைந்த அவர்கள் வலியுல்லாவை நேரில் கண்டு காலில் விழுந்தார்கள். மஸ்தான்சாஹிப் வலியுல்லா பெருமகிழ்ச்சியோடு அவர்கள் அனைவரையும் வரவேற்றார்கள்.

தம்மை நாடி வந்த ஐவரிடமும், ''இன்றுமுதல் நீங்கள் எனது ''கிஸ்மத்தில்'' (பணிவிடையில்) இருங்கள்'' என்று மஸ்தான் சாஹிப் அவர்கள் சொன்னதோடு, ஐவரும் தங்குவதற்கு ஒரு வீட்டையும் ஏற்பாடு செய்து கொடுத்தார்கள். மஸ்தான் சாஹிப் வலியுல்லாவுக்கு மற்றவர்கள் கொண்டுவந்து கொடுத்த காணிக்கைப் பொருட்களை அன்றுமுதல் அவர்களே பெற்றுவந்தார்கள். அவற்றைக் கொண்டு தாங்கள் வாழ்ந்ததோடு வலியுல்லாவின் இறுதிக்காலம் வரை அவர்களுக்கு வேண்டிய பணிவிடைகளைச்செய்து வந்தார்கள்.

## முத்திரையடிச் சத்திரத்தில் மஸ்தான் சாஹிப்

இதற்குப்பிறகு மஸ்தான் சாஹிப் அவர்கள், தாம் தனி மாளிகையில் தங்க விரும்பாமல், முத்திரையடிச் சத்திரத்தின் ஓர் மூலையில் தங்கி வாழலானார்கள். அங்கே "அறுபட்ட நாக்கை வளரச்செய்தது", "காவலைக் கடந்து வெளியில் வந்தது", "கடலில் சிக்கிய கப்பலைக் கரையில் சேர்த்தது", "பிரசவ வேதனையைக் குறைத்தது", "பிள்ளைவரம் கொடுத்தது" என்றெல்லாம் எண்ணற்ற அற்புதச் செயல்களை நாள்தோறும் ஆற்றிவந்தார்கள்.

## வலியுல்லாவின் மறைவு

இவ்வாறு, துருக்கியில் தோன்றி இறைநாட்டம் கொண்டு காரைக்கால் வந்தடைந்த மஸ்தான் சாஹிப் வலியுல்லா அவர்கள், இங்கே 21 ஆண்டுகள் தங்கியிருந்து மக்கள் குறைகளைப் போக்கியும், அவர்களை நல்வழிப்படுத்தியும் நற்றொண்டு புரிந்தார்கள்.

இறுதியில் **தமது 120 ஆவது வயதில், ஹிஜ்ரி 1244 ஷஃபான் பிறை 1இல் (28.2.1829) வலியுல்லா அவர்கள் தாம் பிறந்த அதே மாதம், அதே நாள், அதே நேரத்தில் இவ்வுலகை விட்டு மறைந்து இறையடி சேர்ந்தார்கள்.**

அவர்களை எங்கே அடக்குவது என்பதில் காரைக்கால் கீழத்தெருவினர்க்கும், மேலத் தெருவினர்க்குமிடையே கருத்து வேறுபாடு ஏற்பட்டது. அப்போது காவல்துறையினர் தலையிட்டு, வலியுல்லாஹ் தாம் உயிரோடிருக்கும் போது, எங்கே தம்முடல் அடக்கப்பட வேண்டும் என்று குறிப்பிட்டார்களோ, அங்கேயே அவர்களது உடலை அடக்கம் செய்வதென முடிவெடுத்தார்கள். அதற்கிணங்கத் தற்போது தர்ஹா எழுப்பப்பட்டுள்ள இடத்தில் மஸ்தான் சாஹிப் வலியுல்லாவின் திருவுடல் நல்லடக்கம் செய்யப்பட்டது.

அவர்களைக் குளிப்பாட்டியபோது அவர்களது திருமுடியின் ஒருபகுதி கழன்றுவர, அம்முடி வெள்ளிப் பேழையில் வைத்துப் பாதுகாக்கப்பட்டு இன்றும் தர்ஹாவில் இருக்கின்றது. மேலும் வலியுல்லா பயன்படுத்திய பாத்திரங்களும் இன்றளவும் உள்ளன.

## வாழ்க்கைச் சுருக்கம்

மஸ்தான் சாஹிப் வலியுல்லாவின் வரலாற்றைப் பின் வருமாறு சுருக்கமாக நாம் நினைவிற் கொள்ளலாம்.

| | | |
|---|---|---|
| பெற்றோருடன் வாழ்ந்தது | 25 | ஆண்டுகள் |
| அமைச்சர் பதவி வகித்தது | 15 | ஆண்டுகள் |
| ஞானப் பயணம் புரிந்தது | 47 | ஆண்டுகள் |
| ஞானகுருவிடம் தங்கியது | 12 | ஆண்டுகள் |
| காரைக்காலில் வாழ்ந்தது | 21 | ஆண்டுகள் |
| ஆக | 120 | ஆண்டுகள் |

பிறந்த நாளிலேயே இறந்த பெருமையும் இவர்களுக்கு உண்டு.

## திருப்பெயர் விளக்கம்

வலியுல்லாவின் முழுப்பெயர் ஹலரத்து செய்யிதினா ஹாஜி ஷாஹலி இமாம் திவான் மஸ்தான் செய்யிது தாவுது புகாரி வலியுல்லா என்பதாகும். இவற்றின் பெயர் விளக்கத்தை ஈண்டு நோக்குவோம்.

| | |
|---|---|
| **"ஹலரத்து செய்யிதினா** | என்பது புகழுஞ் சொற்கள் |
| **"ஹாஜி"** | என்பது புனிதப் பயணம் போனவர் |
| **"ஷாஹலி மஸ்தான்"** | என்பது காரணப் பெயர் |
| **"ஷா இமாம் திவான்"** | என்பது ஞானகுரு இட்ட பெயர் |
| **"செய்யிது தாவுது"** | என்பது பெற்றோர் வைத்த பெயர் |
| **"புகாரி"** | என்பது பிறப்பிடத்தைக் குறிப்பது. |

இவ்வாறு வலியுல்லாவின் பிறப்பிடம், பதவி, பண்பாடு, உயர்வு போன்றவற்றையெல்லாம உள்ளடக்கியதாய், அவர்களது திருப்பெயர் வழங்கி வருகின்றது.

## தர்ஹா கட்டியது

காரைக்கால் மஸ்தான் சாஹிப் வலியுல்லாஹ் மறைவுற்று நல்லடக்கம் செய்யப்பெற்றதும், அவர்கள் அடக்கப்பட்ட இடத்திற்கு உரிமையுடைய **ஜனாப் மு. சாயபு, ஜனாப். கா. அபூபக்கர்** ஆகியோர், அடக்கவிடத்தைச் சார்ந்த மனைகளை அன்போடு நன்கொடையாக வழங்கினர். பின்னர் திருவாளர்கள் **காதிறு கண்டு மரைக்காயர், மதார் சாயபு மரைக்காயர், மஞ்சூர் சாயபு மரைக்காயர், கன்னிசாயபு மரைக்காயர், காதிர்சாயபு மரைக்காயர் ஆகிய நாட்டாண்மைக்காரர்கள் ஐவரும், ஜனாப் செய்கு இஸ்மாயில் லெவ்வை மரைக்காயர், ஜனாப், ஆனைப்பிள்ளை மரைக்காயர், ஜனாப். செ. காதிறு முகையதீன் மரைக்காயர், ஜனாப். மு. முகம்மது அலி** ஆகிய செல்வந்தர்களின் பொருளுதவியோடு தர்ஹாவின் ஒரு சில பகுதிகளைக் கட்டுவித்தார்கள்.

**வெங்கடப்ப செட்டி** என்ற காரையில் வாழ்ந்த இந்து பணக்காரர் கடலில் நிலை தடுமாறிய தமது கப்பல், மஸ்தான் சாஹிப் அருளால் கரை சேர்ந்தது என்று அகம் மகிழ்ந்து, தர்ஹாவின் நடுமண்டபத்தைக் கட்டிக் கொடுத்தார்.

மற்றும் **சு. முத்துசாமி நாயக்கர், மு. சதாசிவப்பிள்ளை, ரா.ம. மளிகை கோவிந்தப்பிள்ளை** போன்ற இந்து பெருமக்களும் தர்ஹா கட்டுவதற்கு வேண்டிய உதவிகளை விரும்பிச் செய்துள்ளனர். வலியுல்லாவின் நல்லாசி பெற்ற அடியவர்கள் பலரும் அவ்வப் போது தர்ஹாவின் பல்வேறு பகுதிகளைக் கட்டிக் கொடுத்துள்ளனர். இவ்வாறு சாதி, மத வேறுபாடின்றி எல்லாரின் உதவியோடும் மஸ்தான் சாஹிப் தர்ஹா கட்டப்பட்டிருப்பதே, அவர்களது பெருமைக்கோர் உரைகல் எனலாம்.

## வலியுல்லாவைப் பற்றிய நூற்கள்

காரைக்கால் மஸ்தான் சாஹிப் வலியுல்லாவின் அற்புத ஆற்றலால் ஈர்க்கப்பட்டுப் பல்வேறு புலவர்கள் தமிழ், அரபி, இந்தி ஆகிய மொழிகளில் தனிப்பாடல்கள் பலவற்றைப் பாடி யுள்ளனர். சிலர் உரை நடையிலும் எழுதியுள்ளனர். அவற்றை யெல்லாம் அடிப்படையாகக்கொண்டு **"காரை மஸ்தான் காரணச் சரித்திரம்"** என்று நூலைக் **காதிறு கனி M.S.** என்ற பெரும் புலவர் 1903 ஆம் ஆண்டில் வெளியிட்டுள்ளார்.

1915 ஆம் ஆண்டில் பொறையாறு **மு.செ. சுல்தான் அப்துல்காதிர்** என்ற புலவர், அகப்பொருள் துறைகளோடு 100 கட்டளைக் கலித்துறை பாக்களில் **"காரையந்தாதி"** என்ற அழகிய பாடல் நூலை வெளியிட்டுள்ளார்.

மேலும் மஸ்தான் சாஹிப் அவர்களைப் புகழ்ந்து, **"காரை மஸ்தான் பதிகம்", "திருக்காரை இரட்டை மணிமாலை"** ஆகிய நூல் களை எழுதிய வரும் இவரே யாவார்.

1911 ஆம் ஆண்டில் என் பாட்டனார் **"அமுதகவி, சாயபு மரைக்காயர்** வெளியிட்டுள்ள **"மஹ்பூபு பரபதக் கீர்த்தனம்"** என்ற நூலில், வலியுல்லாவின் பெருமைகளைப் புகழ்ந்து 8 பாடல்கள் இடம் பெற்றுள்ளன. பின்னர் அவர்களே 1933ஆம் ஆண்டில் **"காரை மஸ்தான் காரணக் கீர்த்தனப்பா"** என்ற வேறொரு நூலையும் எழுதி வெளியிட்டுள்ளார்.

1917ஆம் ஆண்டில் **பிறையாறு ஆ.மெ. முகம்மது கவுது மரைக்காயர்** என்ற புலவர் **"காரைக் கொடியலங்காரச் சிந்து"** என்ற நூலையும்,

ஹிஜ்ரி 1314ஆம் ஆண்டில் **இளையான்குடி மகாவித்துவான் மதுரகவி பட்டைப் புலவர் "அருள்மணி மாலை"** என்ற நூலையும் வலியுல்லாஹ்வைப் புகழ்ந்து எழுதியுள்ளனர்.

இவற்றுக்குப் பிறகு மஸ்தான் சாஹிப் வலியுல்லாவின் வரலாற்றை, எளிய உரை நடையில் ஓரளவு சுருக்கமாகக் கூறும் நூல் என்ற சிறப்பினை இந்நூலே பெறுகின்றது.

1981 ஆம் ஆண்டு காரைக்கால் முஸ்லிம் பஞ்சாயத்துச் சபையினரால் நாங்கள் எழுதிய **"காரைக்கால் மஸ்தான் சாஹிப் வலியுல்லாஹ் வரலாற்றுப் பேழை"** என்ற பெருநூல் வெளியிடப் பட்டது. மூன்று பதிப்புகளை வெற்றிகரமாகக் கண்ட இந்நூல் நான்காம் பதிப்பை எதிர்நோக்கியுள்ளது.

2008 ஆம் ஆண்டில் **அதிரை அருட்கவி அல்ஹாஜ் மு. முஹம்மது தாஹா மதனீ** அவர்களால் **"காரை மஸ்தான் ஆற்றுப்படை"** என்ற சிற்றிலக்கியம் சிறப்பான முறையில் வெளிவந்துள்ளது. அண்மைக் காலத்தில் வலியுல்லாவைப் பற்றி வெளியான அழகிய நூல் இதுவாகும்.

## கந்தூரி விழா

மஸ்தான் சாஹிப் வலியுல்லாவின் நினைவைப் போற்றும் வகையில், ஒவ்வோரு ஆண்டும் ஷஃபான் மாதத்தில் 9ஆம் பிறை தொடங்கிப் பதினான்கு நாட்கள் 'கந்தூரி விழா' சிறப்பாகக் கொண்டாடப் பட்டு வருகின்றது. முதல்நாள் அன்று கொடியேற்று விழாவும், பத்தாம் நாள் அன்று ஒலியுல்லாவின் திருச்சமாதிக்குச் சந்தனம் பூசுதலும், பதினான்காம் நாளில் கொடி இறக்குதலும் நடைபெறுகின்றன.

மஸ்தான் சாஹிப் மறைவுற்றதற்கு அடுத்த ஆண்டாகிய ஹிஜ்ரி, 1245 ஆம் ஆண்டு முதல் (கி.பி.1825), கடந்த 192 வருடங்களாகக் 'கந்தூரி விழா' காரைக்காலில் ஆண்டுதோறும் மிகச்சிறப்பாகக் கொண்டாடப்படுகின்றது. சாதி, சமய வேறு பாடின்றி எல்லாரும் இவ்விழாவில் பங்கேற்று மஸ்தான் சாஹிப் வலியுல்லாவின் நல்லாசியைப் பெற்றுவருகின்றனர்.

*"ஏரிநிறைந் தோடமழை பெய்யச் செய்திர்*
*இலங்கும்பதிக் காரை மஸ்தான் வலியுல் லாவே!*
*பாரிற்படும் இடரோட அருட் புரிந்து*
*பன்னாளும் பதமலரீந் தாள்கு வீரே!"*

என்று அமுதகவி சாயபு மரைக்காயர் வேண்டுவதைப் போன்று, நாமும் மஸ்தான் சாஹிப் வலியுல்லாவின் நல்லாசியை நாடுவோமாக.